கன்னியுந் தடத்தோடுங்காதலான்
மன்னுங்கோயின்மூவலஞ்செய்துட்புகுந்
தன்னைமாதுமையணங்கொடையனைப்
பொன்னின்மாமலர்பொழிந்துபோற்றியே. (உச)

மூலவான்பிலமதனைமுந்துறக்
கோலக்கண்மலர்குளிரநோக்கியே
யேலவார்குழலிறைவிதன்னைவை *
வேலின்மன்னவமீண்டும்போற்றியே. (உரு)

பிறைமுடிந்தபெம்மானுக்கன்பினாற்
றிறல்கொள்வேந்தநீசிறப்புஞ்செய்தியே
லிறைவனுண்மகிழ்ந்திலவச்செய்யவாய்
முறையின்மக்கண்மூவரையளிப்பனால். (உசா)

அந்தமைந்தராலசுவமேதமுஞ்
சிநதையன்புறச்செய்துமுற்றுவாய்
மைந்தனேயெனவகுத்துமாதவன்
புந்தியார்தரப்புசித்துப்போயினான். (உஎ)

வீணைமாமுனிவிடுத்துப்போயபின்
கோணைமாகளிற்றுழவன்கோற்றொடி
மாணலந்தருமனைவிதன்னொடும்
பூணுநூற்புரோகிதரும்போதவே. (உஅ)

சோணைமாநதிமுதலதாநதி
யாணர்வண்புனலெவையுமாடிப்போய்த்
தாணுவங்கியஞ்சையமேத்துபு
கோணிலாமுதுகுன்றம்போற்றியே. (உகூ)

தடங்கொள்காவிரிதன்னிலாடிவண்
குடந்தைமாநகர்கும்பிட்டேத்தியே
மடந்தைபங்கினன்வாழுஞ்சுந்தரத்
தடங்கொள்வெற்பணித்தாகச்சார்ந்தனன். (௩0)

சார்ந்துமன்னவன்றலையினாற்பணிந்
தார்ந்தசிந்தையினன்புவட்டெழச்
சேர்ந்துசூரியதீர்த்தமூழ்கினான்
வார்ந்தகூந்தலின்மனைவியோடுமே. (௩க)

---

* 'இறைவிதன்னையும்' என்றும் பிரதிபேதம்.

அந்தணாளருக்களவிலாநிதி
சிந்தியத்தடந்தீர்த்தப்பாங்கரிற்
பந்தரோடுநீள்பன்னசாலையுந்
தந்துதீயையுந்தாபித்தானரோ. (ருஉ)

பின்னையன்னவன்பிரமதீர்த்தத்திற்
பன்னிதன்னொடும்பனவர்தம்மொடுந்
துன்னியாடுபுதூயவன்சொலு
மன்னவாறெலாமடைவினாற்றினான். (ருங)

அரசனாற்றலுமாவுந்திங்களும்
விரவிச்சூடியவேணிநாயகன்
கருணைகூர்ந்துமுக்காதன்மக்களை
யொருவயிற்றொருங்குயிர்ப்பநல்கினான். (ருச)

அண்ணல்பானையாளன்புமீக்கொள
வெண்மணநல்விழாவினிதியற்றுபு
நண்ணுமேனையசடங்குநன்குறப்
பண்ணிநம்பனைப்பணிந்துபோற்றியே. (ருரு)

உறுதியக்கினிவண்ணனாழியு
மிறுதியின்றியவேமவண்ணனோர்
மறுவில்ரத்தினவண்ணனென்றுபேர்
சிறுவர்மூவர்க்குஞ்செப்பினானரோ. (ருகா)

செப்பிவேந்தனுந்தெரிவைபங்கினற்
கொப்பிலாதனசிறப்புமாற்றியே
யிப்பெரும்புவியினிதினேத்துமா
றப்பதிக்கணுற்றமர்ந்திட்டானரோ. (ருஎ)

அரசன்சில்பகல்செல்லவன்பினாற்
புரவிமாமகம்புதல்வர்தம்மொடும்
விரைவினாற்றுவான்வேதவேதியர்க்
குரைசெய்தன்னவரோடுமுற்றினான். (ருஅ)

சுரபிகோடிகள்சுருதிவாணருக்
கரனல்கியேயமலர்கன்பினாற்
பரவுபன்னிருபதிகொடுத்தொளி
விரவுபொற்பணிவிழைவினுய்த்தரோ. (ருகூ)

முத்தமாலையும்முழுத்தசோதிய
வித்துருமத்தால்விளைத்தமாலையும்
பத்திபத்திசேர்பதுமராகத்தின்
கொத்துமாலையுங்கொடுத்துக்காவலன். (௪௦)

பொன்னந்தானையும்பூம்பட்டாடையு
மின்னுநித்திலம்விளிம்புபோக்கிய
வன்னச்சேலையும்வகைவகைபெறப்
பன்னுசித்திரப்படமுமீந்தரோ. (௪௧)

செம்பொன்வள்ளமுஞ்சிறந்தவெள்ளியி
னம்பொன்வள்ளமுமனையவேணவும்
பைம்பொன்வாகனம்பலவும்பாங்கினு
லும்பரும்பருக்குதவிப்பார்த்திபன். (௪௨)

அண்ணலார்தமக்கன்புமீக்கொள
வெண்ணிலாப்பணியின்னவாறுசெய்
துண்ணயந்துநல்விழவுமுய்த்தவன்
விண்ணவர்க்குந்தென்மேற்குத்திக்கினில். (௪௩)

செருவவாளிமூன்றிடையிற்றிவ்விய
வுருவிலிங்கமாங்கொன்றுதாபித்துத்
தருமதீர்த்தமென்றொருதடாகமுந்
சுருதிவாய்மையாற்றொட்டிட்டானரோ. (௪௪)

மகரத்திங்களில்வாய்ந்தபூசநாட்
பகருமத்தலம்படிந்தமேலவர்
புகரனைத்தையும்போக்கிப்பொன்றுஞ
சிகரின்மேற்கதிநெறியினெய்துவார். (௪௫)

மிக்கசெம்பொனும்வீறுவெண்பொனு
மக்குளப்படிந்தறிஞர்க்கீந்துளோர்
தொக்கவக்கினிட்டோமமேதகு
தக்கவான்பயன்றனையுமெய்துவார். (௪௬)

இடபத்திங்களினெய்துபூரணை
தடமதிற்படிந்தாங்குத்தாபித்த
கடவுளைவலங்கணிவிற்சூழ்வந்தோர்
புடவிசூழ்பயன்பொருந்தவாழ்வரால். (௪௭)

கேசமுற்றியாணினைந்துபற்பல
பேசலென்கொலாம்பின்னுகன்னுறை
மாசில்சுந்தரசயிலம்வாரிசூழ்
காசினிக்குள்வண்கயிலையாகுமால். (௪அ)

விளம்புமிக்கதைபகருமேலவ
ருளங்கனிந்துகேட்டுருகுந்தூயவர்
வளங்கொள்பூதலமரபினண்டுபின்
களங்கனிக்களன்கயிலைசேர்வரால். (௪௯)

தருமசேனச்சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-அ௧௧.



பதினேழாவது

# தீர்க்கதுண்டச் சருக்கம்.

வேறு.

அலகில்கேள்வியருந்தவரன்பினு
லுலகமேத்துமுறுதவச்சூதனைத்
திலகமாகியதீர்க்கதுண்டன்செயற்
குலவுமாக்கதைகூறெனக்கூறுவான். (௧)

அளக்கருண்டவருந்தவன்கற்பினிற்
றுளக்கமின்றியதூமொழிதன்னுடன்
களக்கனிக்களத்தானுக்கீசானத்தின்
விளக்கமெய்தியவேதியர்சூழவே. (௨)

பன்னசாலையமைத்துப்பரிவினு
லன்னநல்லூரமர்ந்தனனந்தரட்
டென்னுதிங்கள்சுடரவனேடெய்தி
மன்னுவைகலின்வாயதவான்பலி. (௩)

இடுதனேக்கியிருந்ததொர்வாயதஞ்
செடிகொண்மென்சிறைத்தீர்க்கதுண்டன்னெனப்
படியிற்பேர்பெறும்பான்மையதப்பலி
கடிதின்வவ்விக்ககனத்தெழுந்ததால். (௪)

எழுந்துதென்றிசையேயேகலு
மழுந்தவவ்வியவப்பலிதன்னையோர்
செழுஞ்சிறைக்கொடியென்றுதொடர்ந்திடப்
புழுங்கிவீழ்த்திப்புறம்புக்கதாமரோ. (௫)

வீழுமப்பலிவீதியினெய்திய
தாழுமேப்பிற்றளர்ந்தவொராதுலன்
கீழிலாதகடிலைனுக்கலத்தினி
லூழின்வீழ்ந்ததுவீழவுவந்தவன். (௬)

எந்தைதநல்லருளாலிஃதெய்திய
துய்ந்தனம்மினியென்னவொருங்குட
னந்தவன்னத்தையாழ்புனலோடளாய்ச்
சிந்துருதருந்திப்பசிதீர்ந்தனன். (௭)

பலியைவீழ்த்திப்பறந்தப்புறஞ்செலு
மொலிசெய்காகத்தையுற்றவொர்வேட்டுவன்
வலிதினெய்தனனெய்தலுமற்றது
மெலியமண்ணிடைவீழ்ந்ததுவாமரோ. (௮)

வெள்ளையானைவிதிமுறைதாபித்த
தெள்ளுசோதிச்சிவலிங்கமேற்றிசைத்
துள்ளியாருயிர்சோர்ந்ததுசோர்தலு
மௌளொணாதவிமானம்வந்தெய்திற்றால். (௯)

முந்தநீள்வடந்தூக்கிமுறைமையால்
வித்துருமவியன்காணிறுவிய
தத்துசோதியத்தாவில்விமானத்தின்
வித்தகத்திமையோர்புடைமேவவே. (க0)

வீசுசாமரைவிண்ணகமாதரார்
நேசமாகநெறியினிரட்டினார்
வாசமாமலர்தூவிமணிமுடித்
தேசுலாமிமையோர்திசைபோற்றவே. (கக)

தீர்கதுண்டன்சிறந்தமெய்த்தேவனாய்
மேற்கொள்சோதிவிமானத்தின்மீதிவர்ந்
தேற்கும்வண்ணமிருங்கயிலைப்புறம்
பாற்கணங்கொணர்ந்தேகப்படர்ந்ததே. (கஉ)

படர்ந்துசென் றுபரன்பதம்போற்றுபு
திடங்கொள்காகஞ்சிறந்தயனிற்றலு
*நடங்கொணுதனயப்புடனேக்கியே
தொடர்ந்தகாதலினின்னணஞ்சொல்கின்றுன். (கங)

பொன்னுலாகம்பொருவினல்லூரினீ
யன்னதானமியற்றுமமைதியான்
மன்னுகின்றகணங்கட்குமன்னனுய்த்
துன்னிவாழ்கெனச்சொற்றனன்சொற்றலும். (கச)

அம்பொற்சேவடிபோற்றியவணின்ற
வும்பராரையவோதுகவத்திற
மிம்பர்காட்டிலிதுசெய்தவாறென
நம்பனேக்கிநகைத்ததுசொல்லுவான். (கரு)

பலிகவர்ந்துபடரவொர்வாயத
மெலிவுசெய்தலும்வீழ்ந்தவியன்பலி
கலியிறுனெர்கடிகைக்கலத்தினி
னலியுமாறின்றிநன்குறவுற்றதே. (கசு)

உற்றபிண்டத்தையுண்டவன்றீப்பசி
முற்றுநீங்குமுறைமையினுலிந்தப்
பெற்றியெய்தியதாலெனப்பிஞ்ஞகன்
சொற்றலோடுந்தொழுதுவியந்தனர். (கஎ)

ஆதலாற்பரனல்லூரதன்கயிற்
காதலாலன்னங்காண்வரவீந்துளோர்
கோதிலாப்பயனைக்குறித்துன்னியா
னேதுமாறெளிதோவெனவோதுவான். (கஅ)

தந்திபோற்றியதாணுவின்சன்னிதி
முந்துறக்கொடிவீழ்ந்தமுறைமையா
லந்தத்தானமகன்றடமாகுபு
சிந்துரும்புவிபோற்பச்சிறந்ததே. (கக)

தேவனுய்க்கொடிசென்றதிறத்தினுன்
மேவுமத்தடமேதினிமேலென்று
மோவில்கேள்வியுறுதவத்தந்தணீர்
தாவிறேவதீர்த்தம்மெனச்சாற்றுவோர். (உ0)

* 'அடங்கொணுதவசிப்புடனேக்கியே' என்று பிரதிபேதம்.

ஆண்டோறுமதிலெய்தியன்பினாற்
சேண்டலம்புகழ்தீர்க்கதுண்டன்படிக்
தீண்டுதர்ப்பணமாதிமெழுவைகளுங்
காண்டகுந்திறஞ்செய்துகனிந்தரோ. (உக)

ஐயனேந்தெழுந்தோதியவணமர்ந்
துய்யும்வண்ணமுவப்புடன்போற்றியே
செய்யசோதிவிமானத்துச்சென்றுமான்
கையன்வாழுங்கயிலையைச்சேர்வனால். (உஉ)

மருவுறையமாவாசையினத்தட
திருதுமன்பினுவப்புடனுடியே
பொருவிலாதன்னதானம்புரிகுளோர்
தெரிவைபாகன்கயிலையைச்சேர்வரால். (உங)

சொற்றவைகலிற்றூய்தடமாடிபு
கற்றைவேணிக்கசேசுரன்சன்னிதிக்
குற்றுத்தீபவுகளங்களேற்றினோர்
மற்றவானவன்வான்பதஞ்சேர்வரால். (உச)

இப்பெருங்கதைகேட்குமியல்பினோர்
மெய்ப்புகின்றதிறனுடைமேலவ
ரொப்பில்போகமுலப்பிலவெய்திப்பி
னப்புலாஞ்சடையானடிசேர்வரால். (உரு)

தீர்க்கதுண்டச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அருசு.

---

பதினேட்டாவது

எக்கியகுத்தச்சருக்கம்.

வேறு.

சொற்றவத்தீர்க்கதுண்டன்றேமிலாக்காதைகேட்டோர்
நற்றவணிகனுய்ந்தநாடருஞ்சரிதையிப்பா
லுற்றுநீகூறுகென்னவுறுதவர்வினவலோடுந்
தெற்றெனச்சூதனுய்ந்துசிந்தையன்பொழுகச்சொல்வான். (க)

சுந்தரகிரிக்கீசானத்தூயநற்றிசையினங்கண்
கந்தமாபுரமதென்னக்காவிரிவடக்கதாக
வந்தமில்பதியொன்றோங்குமப்பதிமேன்மைதன்னை
யெந்தையேயுரைப்பதல்லால்யாவரேயுரைக்கவல்லார். (௨)

அத்தகைநகரினங்கணவுணரையடர்ந்தவேலோற்
குத்தரதிசையிற்கூபமொன்றுளததனிலாடிற்
குத்திரமெவையுநீங்குங்குமரகண்டமும்போமாங்கே
சத்தியவிரதன்சித்திசார்ந்ததோர்தடமுமுண்டால். (௩)

பாவகன்றிசையிலோர்வண்பலாசின்கீழ்ப்*பிரமதீர்த்த
மேவரவிளங்குமந்தமேதகுபதியின்வாழ்வோன்
றூவிலாவணிகர்கோமான்றனபதியனையசெல்வ
னேவுமாறெக்யருந்தனெனுமபிதானமுற்றோன். (௪)

பரமனுதிரைநன்னுளிற்பண்டங்களவையுங்கொண்டு
மருவியநல்லூரெய்திவாணிகஞ்செய்வானெண்ணிப்
பிரமதீர்த்தத்தின்கீழ்பாற்பிறங்குமப்பண்டமெல்லா
மொருமையிலுய்த்துக்காவலோம்பினனுவகைபூப்ப. (௫)

விடர்பலரோடுங்கூடிவிநோதங்களவையுஞ்செய்து
மடநடைமடக்கைநல்லார்வனமுலைப்போகம்வேண்டி
நடனமூர்த்திக்குமுன்செய்நாடகம்பார்க்கச்செல்வான்
றடவரையுயிர்த்தபாவைசன்னிதிசாரவந்தான். (௬)

வந்தவனுங்குவிஞ்சைமாதவர்பலருநகூடிச்
சிந்தனைசெய்துகூறுந்தீர்க்கதுண்டன்புராணம்
புந்தியின்மகிழ்ச்சிகூறப்பொருள்சிலவினவியன்றே
னந்தமிலந்தணாளரடிதொழுதகன்றுமீண்டான். (௭)

படங்குடிலதனுட்புக்குப்பண்டங்கள்பலவநோக்கி
யிடம்பெறுகலத்தினேந்துமினியபாலடிசிலுண்ண
வடைந்தனனயிலுங்காலையன்னமன்னவன்கண்டத்தின்
மிடைந்திடவுடலஞ்சோர்ந்துவீந்தனன்கணத்துமாதோ. (௮)

வீதலுஞ்சிவகணங்கள்விமானத்தினவனையேற்றிப்
பூதலத்தெவரும்போற்றப்பொன்னகரிமையோர்சூழ
நாதன்வாழ்கயிலைவெற்பினண்ணினர்நண்ணக்கால
தூதருமதனைநோக்கித்தொழுதுதம்மினநக்குச்சொற்றார். (௯)

* 'பரமதீர்த்தம்' என்று பிரதிபேதம்.

சொற்றலுங்கூற்றுமஞ்சிந்துணுக்கமுற்றமலனுற்றும்
பெற்றியாரிவரென்னுப்பேசித்தன்னகாமுற்றான்
மற்றவன்றன்னையீசன்வருகெனவருளித்தன்போ
லுற்றதோருருவமன்னோற்குதவினனுவகைபூத்தான். (௧0)

பண்டங்கள்பகரவந்தோன்பண்ணவன்சரிதைகேட்டுக்
கொண்டனன்வடிவமம்மாகுழகன்போலென்றுசொன்னாற்
றொண்டர்தஞ்செயலுநல்லூர்த்துளக்கின்மேன்மையுமெங்கோமான்
றண்டலிலருளும்யாரேசாற்றுதல்புரியவல்லார். (௧௧)

ஆதலாலினையகாதைபயன்புடன்வினவுநல்லோ
ரோதநீர்க்கடலந்தானையுலகெலாமினிதிறுண்டு
வேதனுமுகுந்தன்றானும்விண்ணவரெவரும்போற்ற*
நாதனார்தாளினீழனண்ணிவீற்றிருப்பர்திண்ணம். (௧௨)

எக்கியகுத்தச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்–அ௪அ.



பத்தோன்பதாவது

## கோவிதாரத்துவசச்சருக்கம்.

வேறு.

முண்டகத்தவிசின்விரிஞ்சனையனையமூதுணர்மாதவரெவரு
மெண்டிசைவளாகமுழுவதும்புரப்போனியற்றமிழுட்டினுக்கிறைவன்
றண்டமிழ்முனிவன்வைதவச்சாபந்தணந்தமைசாற்றுகவெனலுந்
துண்டமாமதியமுடித்தவன்பாதந்தொழுதுசூதனுந்தொகுத்துரைப்பான்

சீலமாதவந்தானந்தழுனுப்பட்சேர்ந்துசெய்கொள்கைபெற்றுள்ளோன்
காலவனென்னும்பெயரினன்செழுநீர்க்கவுதமிக்கரையினிலுறைவோ
னேலவார்கூந்தன்மனையொடுமேழவியில்லறமியற்றுமக்காலை
ஞாலமுற்றேகிவருந்தெய்வத்தியாகாமனோர்முனிவனங்குற்றான். (௨)

உற்றமாமுனியையெதிர்ந்துமற்றன்னோனுவப்பினாற்பாத்தியமுதல
பெற்றியினுதவியாசனத்திருத்திப்பிறங்குமாதித்தியம்புரிந்து
கற்றவரிருவரளவளாயுறையுங்காலையில்யாங்குச்சென்றுற்றாய் [ல்,(௩)
தெற்றெனப்பகர்திமென்றவனுரைப்பத்திகழ்தெய்வத்துதியுஞ்செப்புவனு

* 'போற்று' என்று பிரதிபேதம்.

வடாதுகேதாரந்தொடங்கியெம்பெருமான்வாழுமெய்த்தலமுமத்தலத்திற்
றடாகமுஞ்சியுமோடையுமுதலாநண்புனற்றீர்த்தங்களவையும்
விடாதுசென்றாடிமீண்டனனென்னமேதகுகாலவனேக்கிக்
கடாவுதல்புரிந்தானப்பெருங்காதைகட்டுரைசெய்கெனமாதோ (௪)

போற்றுகேதாரத்திருமலையதனிற்புட்கரங்காசிமாநகரி
னேற்றுயர்கொடியோனருளெனவிளங்குமியன்மணிகன்னிகைதீர்த்த
நாற்றிசைபகரும் [1]ப்ரயாகையினதன்கணளிர்புனற்றிரிவேணிதீர்த்த
மாற்றல்சால்கயையிற்றென்புலவாணருய்ப்புனற்றீர்த்தமற்றுபால். (௫)

வயநுதல்பத்தினவன்னிநற்றீர்த்தமணிகூடமென்னுமத்தலத்தி
னயங்கெழுதிரிபுட்கரச்செழுந்தீர்த்தநாடுசத்தாரணியத்திற்
பயங்கெழுபிரமதீர்த்தம்பொன்முகரிபரவுகாளத்திமால்வரையின்
வியர்திடுவெளங்கூர்ப்ரபாசமற்றதன்கண்மேதகுவருணமெய்த்தீர்த்தம். ()

மாளவமதனிற்சூரியதீர்த்தம்வடாரணியத்தலமதன்கட்
கோளுலாங்கதிர்வேற்குகனெடுந்தீர்த்தங்குலவுசீர்க்காஞ்சிமாநகரிற்
றுளதாமரைகளேடவிழ்த்தலருஞ்சருவதீர்த்தஞ்சிதம்பரத்திற்
பூளைவேணியன்றனருளெனப்பொலியும்புகழ்ச்சிவகங்கையாந்தீர்த்தம். ()

பரவுவெண்காட்டின்முக்குளதீர்த்தம்பாமன்சாயாவனமதன்க
ணுரவுநீர்ப்பொன்னிதடங்கடலதனுளுற்றிடுஞ்சங்கமதீர்த்தங்
கருவினையகற்றுமிடைமருததன்கட்காருண்யாவமிர்தநற்றீர்த்தந்
தரைபுகழ்கும்பகோணமற்றதன்கட்டண்புனன்மாமகதீர்த்தம். (௮)

மதுரையிற்பொற்றாமரைராமேச்சரத்தின்மறிகடற்பொருதனுக்கோடி
முதுதமிழ்மலயத்தடவரையதன்கண்முற்தெறிதரங்கநீர்ப்பொருனை
புதுமலர்ச்சோலையவ்வரைப்பாங்கிற்பொழிபுனலத்திமாதீர்த்தங்
கதிர்விடுஞ்சுடர்வேற்செழியனன்னாட்டிற்கரைபொருவைகைமாநதியே. ()

வஞ்சுளேசுரத்தின்மேற்றிசையதனில்வயங்கொளிக்கர்க்கநாமநதி
னெஞ்சலில்புகழ்கூரப்புரமதன்கணீர்ம்புனர்க்கர்க்கவான்குண்ட
மஞ்சனமிடற்றனருளிஞனினைந்தேனுழ்ந்னர்காவிரிநாட்டிற்
பிஞ்சுமாமதிதோய்சுந்தராசலத்திற்பிரமநற்றீர்த்தமொன்றுளதால், (௧௦)

அப்பெருந்தீர்த்தத்தங்கியந்திசையினலர்கதிர்த்தீர்த்தமொன்றுளதா
லிப்பெரும்புவனமுழுவதும்போற்றுமியல்பினதத்தடீரத்
தொப்பருமுவப்பான்மூன்றுநாள்வதிந்தேனுற்றதோரதிசயங்கண்டேன்
கைப்பறுமனத்தாயன்னதுபுகல்வேன்காதலீர்ச்சேண்மதியென்றான் (௧௧)

---

[1] 'பிராகையின்' என்றும் பிரதிபேதம்.

தாளதாமரையின் *வானமுலை மெற்றித்தடஞ்சினைவருக்கைமேற்றுவி
நாளிகேரத்தின் முப்புடைக்குடக்காய்களிர்புனல்வீழ்ந்துகப்புடைத்து
வாளைபாய்ந்துழக்கும்வைகையந்துறைவன்வளங்கெழுவிசாலைமாநகரான்
கோளுலாமாளியனையதிண்டிறலான்கோவிதாரதவசனென்போன். (கஉ)

வளவர்தம்பெருமான்றன்னொடும்பொருதுவாகைகொண்டவன்மணித்
களபமாசனைதோய்தாதகிமாலைகவர்ந்துதன்கயனெடுங்கொடியிற் [தோளிற்
றுளமகிழ்வெய்தவெழுந்தமேலுயர்ந்தேயொன்னலர்க்கடந்துவாழ்நாளிற்
றளவவாணகையாள்பாகனேயனையதமிழ்முனியவன்மருங்குற்றான். (கங)

மேலைநாட்புரிந்ததீவினையுருப்பமெய்த்தவன்றனக்குபசார
மாலைவேலுழவனிழைத்திலனுகிமதித்திடாதிருத்தலைநோக்கி
நீலமாக்கடலையருந்தியோன்றன்பானின்றமானுக்கனைநோக்கி
யாலமேயனையசெயலுடையிவனையழன்றுநீவைதியென்றறைந்தான். (கச)

கும்பமாமுனிவனுணையாலவனுங்கொதித்துடனெதிர்ந்துவெய்துயிர்த்து
வெம்பிநின்னுடலமுழுவதுங்குட்டவியாதியிற்குளித்தியென்றுரைத்தா
னிம்பமாலிகையோனடுக்குற்றுநின்றனனிற்றலும்விரைவி
னிம்பரார்நகைத்துக்கண்புதைத்தகலவெய்தியதப்பிணிமாதோ. (கரு)

தேசுடைப்பசும்பொனொளிதவிர்ந்தன்னோன்றிவ்வியவுருவமுங்கருகி
மாசுடைத்தொழுநோய்வலியினுலழுங்கிமனந்தளர்ந்திரங்கிமாழாந்து
நேசமுந்திறலுமுலகெலாஞ்செலுத்துநிகரில்செங்கோலும்வெண்குடையு
நாசமாயினவாற்சிறுவருமின்றனன்றுதன்றாழ்வினையென்றான். (கசு)

விரிதலைப்பசும்பொனுலகொருங்காளும்வேந்தனும்வேற்றுருவடைந்தான்
குரைகடன்முழுதாணிருபரிலொருவன்கொலைத்தொழிற்புலையனேயானு
வரையினையெடுத்தவிலங்கையரிறையுமவுலிபத்திழந்துமாய்ந்தனனுற் [ன்
பெரியவர்தம்மையவமதிந்தொழுகும்பேதையர்†ருயர்தன்மற்றுளதோ. ()

சிறியவர்பிழைத்தல்பொறுத்திடல்பெரியோர்செய்தியென்பதுதிண்ணமா
றுறுதவனவனைக்குறுகிநாம்வணங்கியுய்வகைபுரிதியென்றிரப்பின் [மா
மறைவலானவனேவீங்குமிப்பிணிக்குமாற்றுமின்றுரைப்பனென்றடுத்து
நறுமலர்தூவியடிபணிந்திடலுநற்றவன்றண்ணளிசுரந்தே. (கஅ)

பொன்னிமாநதிக்குத்தென்கரையதன்கட்பொருந்தியசுந்தராசலத்திற்
றுன்னியசோதிக்கதிரவன்றீர்த்தந்துலங்கியதத்தடமதனின்
மன்னிநீமூழ்கியிறைவனைப்போற்றின்மாசெலாந்தவிர்க்துறுநோயு
நின்னைவிட்டகலுமேனியும்பசும்பொனிறமுடன்போல்வருமன்றே. (கக)

---

* 'வனமலைதமெத்ற்றி' என்று பிரதிபேதம்.

† 'உய்தல்' என்று பிரதிபேதம்.

என்றவனியம்பவரசனும்வணங்கியேத்தலைவிடைகொண்டவ்வாறு
சென்றனனிரவிதீர்த்தநீர்ப்படிந்துசிறப்பரனருளினைப்போற்றி
நின்றவனிற்பநிருமலனருளினின்னுடைமாசெலாந்தவிர்த்தேய
பொன்றுதலிகந்தகாஞ்சனமென்னப்பொலிகநின்னுடலெனப்புகன்றான்.

தம்பிரான்புகலுமக்கணமன்னோன் சார்ந்தவன்பிணியெலாநீங்கி
யும்பரார்போற்றுமுருவமாங்கெய்தியுய்ந்தனனத்தலம்போல
விம்பர்மீதுளதோவிரவிபுட்கரிணியென்னவோர்தீர்த்தம்வேறுளதோ
நம்பனூர்கருணையளவையாருரைப்பார்நான்முகற்குஞ்சொலவரிதால். ()

இன்னணந்தெய்வத்துதிதுதித்திரவிபீர்ம்புனற்றீர்த்தமாக்காதை
தன்னிகர்தவத்துக்காலவற்குரைத்தான் சாந்தமாரம்முனிவரனும்
பின்னலஞ்சடிலத்திறையவனருளின்பெற்றியைநினைந்தகமலர்ந்தான்
பன்னுமிச்சரிதங்கேட்பினுமந்நீர்ப்படிந்துளோர்பலன்பெறுகுவரால். (உஉ)

கோவிதாரத்துவசச்சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்--அஎ0

---

## இருபதாவது

## பிரமதேவர் நாரதர்க்குத் தலவிசிட்டமுரைத்த சருக்கம்.

---

வேறு.

பண்டைச்சதுமறையோரிசைபயினாரதமுனிவற்
கண்டர்க்கிறைநல்லூரியலயனேதியசரிதங்
கொண்டிப்பொழுதுரைசெய்கெனக்கோதந்தவிர்சூதன்
றுண்டப்பிறைமுடியானடிதொழுதன்பொடுசொல்வான். (க)

விண்ணம்புவிமுதலெங்கணுமேவுந்தவமுனிவ
னண்ணுந்தலநதியாதியநாடித்தொழுதாடி
யெண்ணந்தருமிறும்பூதொன்றுகண்டீதெனத்தேர்வான்
றண்ணங்கமலத்தோனடிசார்ந்தானெறிசேர்ந்தான். (உ)

வீணைத்தவமுனிவேதியன்வேரிக்கமலத்தாள்
யாணர்க்கொழுமலர்தூவியிறைஞ்சிப்புகழேத்திச்
சேணிற்பொலிபொன்னிக்கரைத்தென்பாங்கரின்வரையொன்
றுணிக்கனகச்சோதியதாகிப்பொலிதருமால். (ங)

அதன்மீதொருலிங்கஞ்சுவையமுதத்துருவாகி
விதமைந்துடைநிறமொன்றிவிளங்கித்தனிவைகும்
புதுவேரிமணக்குந்தெளிபுனல்வாவியுமொன்று
முதுவானவவுளதாலதின்மூழ்கிச்சிலதூயோர். (௪)

மன்னுஞ்சிவக்குறியொன்றினைவலம்வந்திசைபாடித்
துன்னும்படிவத்தோடுதுறக்கம்புகுகின்றார்
பொன்னினங்கமலத்தோயிறும்பூதங்கதுபுகல்வா
யென்னும்பொழுதவனப்பதியியல்கேளெனவிசைப்பான். (௫)

விம்மாவிகல்புரியாவரும்விறல்வாட்படையவுணர்
தம்மோடமர்மலைந்தேவலிசாய்ந்தோடியவர்நே
ரெம்மாதிரமும்போயெமையெய்திக்குறையிரப்ப
வம்மாமுடியிமையோரொடுமெரிதன்னுலகடைந்தேம். (௬)

வேறு.

நஞ்சராவணையிற்றீம்பானளிகடனுப்பணீடும்
விஞ்சுபேருலகமீன்றமேதகுநாபியோடுந்
தஞ்சம்யாவர்க்குமாகுந்தாளுங்கைத்தலமுங்கண்ணுங்
கஞ்சநாட்போதுபூத்தகருங்கடறன்னைக்கண்டேம். (௭)

காண்டலும்வணங்கிப்போற்றிக்கரகமலங்கள்கூப்பி
வேண்டியா*நிற்குமெல்லைவெள்வளையேந்துமாய
னீண்டுவந்தடுத்ததென்கொலிமையவர்யாருமென்று
மூண்டவான்கருணைதன்னுன்மொழிந்தனன்மொழிதலோடும். (௮)

வண்ணவான்பவளச்செவ்வாய்வார்கடல்வயிறுவாய்த்த
பெண்ணமுதுகந்தமாயன்பேருண்முகத்தைநோக்கி
விண்ணவர்குழாங்களெல்லாம்வெய்யகாரவுணர்போரிற்
றண்ணெனவுடைந்தார்வெல்லுஞ்சூழ்ச்சிநீசொல்வாயென்றேம். (௯)

நிலம்புகழ்பொன்னித்தென்பானீள்வளங்கனிந்துமல்கும்
வலஞ்சுழியதற்குக்கன்னிவான்றிசைமருங்கினூக
நலந்தருகாசியென்றோர்நற்றலமதன்கணுற்றோர்
சிலம்புளதாகுங்கேண்மின்றெக்கிணகயிலையென்றே. (௧0)

காசியேயனைத்துநல்குங்கயிலையுமவணேயாகிற்
பேசுவதெவன்கொலெல்லாப்பேறுநீர்பெறுதறிண்ண
மாசினையெவர்க்குந்தீர்க்கும்வகையினுலெங்கோனுங்குத்
தேசுடையிலிங்கமாகிச்சேர்ந்தினிதுறைவனன்றே. (௧௧)

---

* 'நிற்குமெல்லை' என்று பிரதிபேதம்.

மரணகாலத்திறுங்குவைகுமன்னுயிர்கட்கெல்லாம்
பிரணவமனுவையையன்பெற்றியினுபதேசிப்பன்
றிரமதுவாகையாலேசெய்தவர்பலருமந்தப்
புரமதிலுற்றுவாழ்வர்புகலுவதினிமற்றுண்டோ. (௧௨)

வெம்பபோரிரணியன்றன்வெற்றியைவேண்டியாமக்
கையனைவணங்கிப்போற்றியாற்றல்பெற்றவனைவேன்றே
முப்புமாறும்பர்நீருமொருங்குகாவிரியின்மூழ்கித்
துய்யவத்தலத்தின்மேவித்தோன்றலைபருசசித்தேத்தி. (௧௩)

மும்முறைவலங்கொண்டையன்முளரியங்கழல்சேவித்துச்
செம்மையினந்திமுன்னர்ச்சேர்ந்தெழுத்தைந்துமோதி
னும்மனத்துவந்தவெல்லாநொடிவரையடைவிரென்ன
வெம்மையீன்றெடுத்தோன்கூறியினையனபிறவுஞ்சொற்றான். (௧௪)

வாகையுந்திருவும்வேண்டின்மாயாபீசத்தினோடு
மோகைகூர்வசியம்வேண்டினுறுங்காமபீசத்தோடு
மோகந்தீரவிஞ்சைவேண்டின்மொழியும்வாங்மயபீசத்தோ
டேகமானதரேயாகியம்புமைந்தெழுதவைதயென்றான். (௧௫)

என்றவன்பகரயாமுமிமையவரோடுமீண்டு
நன்றறிபுலவிர்நல்லூர்நாதனைவணங்கியேத்திக்
குன்றெனத்திரண்டதிண்டோட்கொலைத்தொழிலவுணர்தம்மை
வென்றுநீர்வாழ்திரென்றேம்விண்ணவர்விடைகொண்டாரால். ()

மணமலிசோலைசூழ்ந்தவளங்கெழுநல்லூரெய்திக்
கணமலைபரசன்பாவைகணவனைத்தொழுதுபோற்றி
யிணையெதிரிமையோரெல்லாமீண்டுமோரவுணர்தம்மை
நிணமலிபடையால்வென்றுநிகரிலாச்செல்வமுற்றார். (௧௭)

இன்னனதிறங்களெல்லாமெய்துமத்தலத்தின்மேன்மை
முன்னவனன்றியாரேமொழிவாத்தலத்தினங்கண்
மன்னியதீர்த்தமாடிவள்ளலைவணங்குமாந்தர்
பொன்னுலகெய்துமாறுபுதுமைத்தோபுகழ்மைத்தன்றால். (௧௮)

மலர்மிசையுறைவோனேந்துமகதியாழ்முனிவற்கிவ்வா
றலர்தருகருணைதன்னுலடைவுறப்பகர்ந்தானன்னோன்
றலமுழுதளித்தோன்செய்யசரணபங்கயங்கள்போற்றி
யிலவவாயுமைபாள்பங்கனின்னருள்வியந்துசென்றான். (௧௯)

படித்தவிச்சரிதந் தன்னைப்பகர்ந்துளோரிருந்துகேட்டோ
*ரெடுத்தபேரன்பினாலேயேட்டினில்வரைதல்செய்வோர்
கொடைத்திறலரசராகிக்குவலயமுழுதுங்காத்துச்
சுடர்ப்படைக்குலிசன்போலத்துறக்கநாடாள்வரன்றே. (௨0)

பிரமதேவர் நாரதர்க்குத் தலவிசிட்டமுரைத்த சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அ௯0.

---

இருத்தோன்றாவது

மாயவனருச்சனைச் சருக்கம்.

---

வேறு.

வேதன்றனையருண்மலர்நாபியனடல்விறல்கூருங்
கோதந்தரு.பிரணியனைப்பொருது†குமைத்தெற்ற
நாதன்பதமலர்பரவுஞ்‡சரிதநவில்கென்னச்
சூதன்படிமையர்மகிழும்படியதுசொல்கின்றான். (௧)

கடல்சுற்றியநிலவலயமுமலர்கற்பகநாடு
முடன்மொய்த்தடிதொழவமரிற்பகைஞருடைந்தோடச்
சுடர்விட்டெறிமணிமவுலிக்கடவுளர்தொழுநாளு
மடல்பெற்றிகல்புரியிரணியனென்றோரசுரேசன். (௨)

மறையிற்புகலருமறைவைத்துணையுமறந்தேதகப்
பறையிற்றனதுயர்நாமமதொன்றேபகர்கென்ன
முறையிட்டறநெறியின்றிக்குவலயமூன்றுந்தாந்
திறையிட்டவம்வரநெடிதுகொடுங்கோல்செயுநாளில். (௩)

வேறு.

நிரந்தரமவுணர்தம்மானிலைதளர்ந்திடுக்கணெய்திப்
புரந்தரன்முதலதேவர்புலம்பிநொந்திரங்கியேங்கி
யரந்தைதீரகழ்ந்துபோக்கியஞ்சலென்றுலகங்காக்கும்
வரந்தருமாயன்முன்னர்வந்தனர்வருந்தலோடும். (௪)

---

* 'அடுத்தபேரன்பினாலேயலேகத்தில்வரைதல்செய்வோர்' என்று பிரதிபேதம்.

† 'குமைத்தேற' என்று பிரதிபேதம்.

‡ 'சரதம்' என்று பிரதிபேதம்.

செங்கண்மாலருளினோக்கி* த்தேவரைவருகவென்று
ஈங்குநீர்வந்ததென்கொலியம்புமினென்றுகூற
வங்கண்ஞானுலகமாதியுலகங்களனைத்துமாலம்
பொங்கிமீதெழுந்தாலென்னப்பொருதிரணியன்கைக்கொண்டா [ன். (௫)

வெய்யபோரவுணனுமமல்லதுவேறுநாங்க
ளையவோதுதலுக்கஞ்சியலம்வந்துதிரிந்தோமென்றார்
பையராவணையிற்றுஞ்சும்பண்ணவவெண்ணில்கால
நையுமாறவன்செய்தீமைநாவினானவிலற்பாற்றோ. (௬)

விண்ணுலகிழந்துநாங்கண்மெலிந்திடுமிடும்பைதீர
வண்ணலங்கலுழப்பாகவருள்சுரந்தளிக்கவென்றுப்
பண்ணவர்மவுலிசாய்த்துப்பதயுகம்வணங்கிப்போற்ற
வண்ணப்பூந்துளபத்தாமன்வாய்மலர்ந்தினையசொன்னான். (௭)

பரசிவனருளினாலேபண்ணவர்கேண்மினின்னே
நரசிங்கரூபமெய்திநாமவன்றன்னைவீட்டி
விரைசெறிதருவினீழன்மேவிநீர்மெலிவொன்றின்றி
யரசுவீற்றிருக்கும்வண்ணமருளுதுமஞ்சலென்றான். (௮)

என்றலுமிமையோரெல்லாமிணையடிக்கமலம்போற்றி
மன்றலந்துளபத்தண்டார்மாயனைவணங்கிச்சென்றார்
பொன்றிகழாகத்தானும்புராந்தகனருளினாலே
வென்றிகொண்டிடவெனென்றுவிளங்குநல்லூரில்வந்தான். (௯)

வந்தமால்பிரமதீர்த்தவண்புனலதனின்மூழ்கிச்
சுந்தரேசனைவந்தித்துச்சுருதிநூல்சொன்னவாற்றாற்
புந்தியின்மகிழ்ச்சிபொங்கப்பூசனைத்தேவயாண்டி
லந்தமில்பத்துநூறாண்டருச்சனைபுரிந்தான்மன்னோ. (௧0)

அருச்சனைபுரியுங்காலையங்கணன்விடைமேற்றோன்ற
வரிச்சிறைத்தும்பிபாடும்வண்டுழாய்முகுந்தனோக்கிப்
பொருப்புவிற்குழைத்துவெய்யபுரம்பொடித்துலகங்காத்த
மருப்பொலிகொன்றைவேணிவானவபோற்றியென்றே. (௧௧)

செய்யபூங்கமலத்தாள்கள்சென்னியால்வணங்கிநிற்ப
வையனுமின்றுநீசெய்யருச்சனைக்குகந்தோம்வேண்டுந்
துய்யநல்வரங்கள்கேண்மோவென்றலுஞ்சுருதிபோற்று
மெய்யநின்னன்பேயல்லால்வேண்டுவபிறிதுமுண்டோ. (௧௨)

---

* 'அருளிநோக்கி' என்று பிரதிபேதம்.

# இருபத்திரண்டாவது
# தேவர்களருச்சனைச் சருக்கம்.

வேறு.

மைந்துடையவுணர்கொடுஞ்சமர்க்கிளைந்தாரவ்வினைவரால்வந்த
விந்திரன்முதலானவரெல்லாமிறைவனையமுதற்றிருட்டிச்
சிந்தனைமகிழ்ந்துபூசனைபுரிந்தசெயலினைவிரித்துரையென்ன
வந்தமிழுவகைபூத்தருட்சூதனம்பெருந்தகைமைசொல்லுவானால். (க)

கொற்றவிழ்த்தலர்மந்தாரநாண்மலர்கள்கொய்தனரொருவழித்தொகுத்து
மந்தரப்பொருப்புப்பாற்கடனடுவெண்மதத்தைநிறுவிவாசுகியைச் [ணைந்த
சந்திரனைடுந்தாணதனைநெடுங்கொழுவிற்றடங்கைபார்கடைந்தனர்கொ
வந்தமிழ்முதகடம்பவனவேக்கியணிபொன்னிக்கரையினுற்றார். (உ)

உற்றவர்பொன்னிமாநதியாடியுகந்தசக்கரதீர்த்தத்தி
பெற்றியின்மூழ்கித்தென்கயிலாயப்பிறங்கலைக்காசிமாநகரை
மற்றவர்நோக்கிவளமெலாங்கண்டுவனத்திடையதிசயமல்கிப்
புற்றரவணிந்தகம்பனைப்போற்றிப்பூசனைபுரிவதற்கமைந்தார். (௩)

சதுமறைதொகுத்தவிதியினுலமார்தற்பரன்றுளினைபோற்றி*
விதுவினிற்பொழிபுனிலவெனக்கடத்தின்மேயவாத்தமுதினுலாட்டி
மதுமலர்சிதறிவந்தனைபுரிந்தேவரன்முறைவழாதருச்சித்துப்
பதுமவாண்முகத்தினுமையையுமிறைஞ்சிப்பாங்கினினந்திமுன்னெய்தி. ()

நாரணன்பகர்ந்தவாறெழுத்தைந்துநவின்றனராயிரம்பருவந்
தாரணிமவுலியிமையவருறைந்தார்தானுவுமாங்கதற்குவந்தே
யாரணம்பழிச்சவிடையின்மேற்றேன்றியன்னவர்காண்வரநின்றான்
கூரணிசுடர்வாட்†குலிசனேமுதலோர்குறுகினர்வணங்கியேத்தெடுத்தார்

மங்கைபங்குடையவள்ளலேவாழிவண்மைமைந்துடையனேவாழி
கங்கையஞ்சடைத்தனணனேவாழிகண்ணுறுதற்கடவுளேவாழி
பங்கயினெல்லிக்கனியிடையமுதாபடியவர்க்கெளிவந்தாய்வாழி
துங்கவெள்விடையின்பாகனேவாழிசுந்தரநாதனேவாழி. (௬)

காலனைக்காய்ந்தகாலனேவாழிகடம்பனைஈன்றவாவாழி
யாலமுண்டிருண்டகண்டனேவாழியாலமர்செல்வனேவாழி
பாலனுக்கொருபாலாழிதந்தருளும்பரமனேவாழிமுத்தலைய
சூலவேலேந்துமமலனேவாழிசுந்தரநாதனேவாழி. (௭)

---

* 'தாளிணைப்போற்றி' என்று பிரதிபேதம்.
† 'குலிசனேமுதலோர்' என்று பிரதிபேதம்.

இன்னனதுதிகளெடுத்தெடுத்தேத்தி* யிமையவரிறைஞ்சினர்நிற்பப் [ளி
பொன்னெடுஞ்சிகரங்குழைத்தகைத்தலத்துப்புனிதனுங்கருணைபூத்தரு
யுன்னியவரங்கள்வேண்டுவகேண்மினும்பர்காளெனவுரைசெயவு
மன்னவர்நின்பாற்பத்திமையன்றியினியம்யாங்குறிப்பதொன்றுளதோ. (அ)

வேண்டுவததுவேபாயினுமையவெய்யகாரவுணரைவீட்ட
மூண்டெழுந்திண்டோண்மதவலிவேண்டுமுன்னம்பாயாட்டுமின்னமுத
மீண்டவிற்பிரமதீர்த்தமிப்புவிமேலின்னமுதத்தடமென்றே
யாண்டகைவிளங்கவேண்டுநின்பெயருமமுதலிங்கம்மெனவேண்டும். (௯)

இத்தகைவரங்கள்வேண்டுமென்றமராரிணையடிவணங்கினரிசைப்ப
முத்தலைச்சூலமேந்துமெய்கோனுமுறைமையாலிங்கவர்க்குதவி
வித்தகவிலிங்கத்தூடுசென்றுறைந்தான்விடைகொண்டுவிண்ணவர்புணர்
கொத்தெலாமறுத்துத்தாழிலாட்டயர்ந்துகுறைவிலாவின்பமுற்றிருந்தார்.

விண்ணவர்தமக்குவிசயநல்குதலால்விசயநாயகனெனப்புவிமே
லெண்ணல்பேர்பெற்றானுரைத்தவிக்காதையன்பினுமோதுவோர்கேட்போ
நண்ணலார்சாயஞாட்பிடைப்பொருதுநனந்தலையுலகெலாம்பரவ [ர்
வெண்ணரும்விசயமெய்திவீற்றிருந்தேயிமையவர்க்கதிபராகுவரே. (கக)

தேவர்களருச்சனைச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-க௨௪.



## இருபத்துமூன்றாவது
## பிரமதேவர் நாரதர்க்குத் தீர்த்தமான்மியமுரைத்த சருக்கம்.

வேறு.

வளர்சடைவரிஞூர்ப்பாடிகத்தியாழ்முனிவன்கேட்ப
தளிர்நாண்மலரின்வைத்தநான்முகனொருவனொப்
தெளிபுனற்றீர்த்தமேன்மைசெப்புகென்றமரவோர்கூற†
வளிமெபறுகுதனவார்ருந்தவர்க்கியம்புகின்றான். (க)

எண்டிசையுள்ளவாகத்துளவீர்ம்புனற்றீர்த்தமாதி
துண்டவெண்மதியந்தோயுஞ்சுந்தரகிரியின்வைகி
விண்டிடவரிதாயன்பின்மீண்டநாரதற்குப்பின்னு
முண்டகன்றீர்த்தமேன்மைமுகமலர்ந்துரைசெய்வானால். (உ)

---

* 'அடுத்தடுத்தோதி' என்று பிரதிபேதம்.
† 'அமரவோர்கூற' என்று பிரதிபேதம்.

எழுத்தைகள்நூறிராட்டியோதிபெண்ணுருபுமாநாந்தத்திற்
றொழுந்தகுமரபாலெய்திச்சுந்தரேசனைக்கண்ணுற்றாற்
குழைப்புறத்துருவும்வேற்கட்கொம்பொடுங்குழகன்கூறுந்
தழைதருளாந்ததுவேண்டுதகைபனநல்குமன்றே. (கக)

கன்னிமாதத்திற்றூயகங்கையின்மூழ்கிடன்பான்
மன்னிபசோமன்வெய்யோன்மருவுருதுசேர்திதியினங்கட்
டென்றுதென்புலத்துளோர்க்குசமொழ்றவாபிண்டநல்கி
னன்னவர்பூரித்தோராண்டகமகிழ்சருவரன்றே. (கஉ)

தங்குலத்துள்ளோர்வாநதிக்கண்புனற்றீர்த்தந்தன்னுறு
வாங்கநீர்தோயவெஞ்ஞான்றுடுவரென்னநோக்கிப்
பொங்குநீர்க்கூவநதன்னிற்பொருநதிதென்புலத்தோருற்று
லங்களுபகனேயல்லால்பாரதன்பெருமைசொல்வார் (கங)

ஐப்பசித்திங்கடன்னிலரும்பெறற்றேயதீர்த்தத்
தொப்பில்காவிரிநற்றீர்த்தத்துண்மையிறுடினன்றே
ரெப்பெருமபவங்களெல்லாமீறுகண்டறிவாத
செப்புவாமுலைபாகன்சேவடிநீழல்வாழ்வார். (கச)

யிக்ககார்த்திகைமாதத்துமேவுகார்த்திகைநன்னாளிற்
றக்கவைகறையின்முன்னர்ச்சாற்றதர்மணதீர்த்தத்தி
னக்கனைநினைந்துமூழ்கினவியாநோய்கழுதுகண்ணு
தொக்கபாவங்களருந்துறக்கமுமெய்தலாமால். (க௫)

மார்கழிமதியினங்கண்மன்னுமாதிரைநன்னாள்
வோமெகழுசாமதீர்த்தத்திரும்புனல்படிந்துகொன்றைத்
தாரணிசுந்தரேசர்தாள்பணிந்தைந்தெழுத்துஞ்
சீர்கெழுநந்திமுன்னர்ச்செபித்துளோர்பவந்துச்செல்லார். ()

மாசிநற்றிங்கடன்னில்வரும்புனற்பிரானையாடிற்
பாசவேரரிந்துவெய்யபஞ்சபாதகத்திற்றீர்வர்
தேசுலாமுனிவர்தேவர்தென்புலத்தவருமூழ்கி
யீசனைப்போற்றிவேண்டுமின்பமுற்றினிதுவாழ்வார். (கஎ)

மக்களில்லாதமாந்தர்மக்களைப்பெற்றுவாழ்வார்
மிக்கதோர்கல்வியில்லார்விஞ்சைபெற்றுண்மைதேர்வார்
தொக்கதீப்பிணிகளுற்றோர்சூழ்ந்தநோயனைத்துந்தீர்வார்
கைக்கிருந்திபில்லாதார்கலின்பெறுகுபேரனாவார் (கஅ)

மாசிகன் மகத்திற்கீழ்பான் மன்னியபிராகையாடி
யோசைகூர்சிந்துதீர்த்தத்துவந் தனர்மூழ்கியன்பா
லீசனையேத்திப்பின்னரிங்கிரதீர்த்தமாடி
யாசில்வானவனைப்போற்றினிம்பொனுடாள்வரன்றே. (௧௯)

அங்கியந்தீர்த்தமாடியத்திசையமலற்போற்றின்
வெங்கலி முதலாயுள்ளவிலக்குதீயுண்டியெல்லா
நுங்கியபாவந்தீர்வர்நோன்மைசேரமதிக்கின்கட்
டங்கியவவமிருத்துத்தவிர்த்திடுந்தீர்த்தந்தன்னில். (௨௰)

ஆடியத்திசையினூர்றவமிருந்துகரற்போற்றின்
வீடுதலரியவாயவெவ்வவமிருந்துநீங்கு
நீடியநிருதிதீர்த்தநேசித்துமூழ்கியந்தப்
பீடியர்சிவனைப்போற்றிற்பிள்ளைகளருளினாலே. (௨௧)

பிரார்மனைநயந்ததீங்குபெயர்ந்திடும்வருணதீர்த்தத்
தறவினையாளர்மூழ்கியத்திசையரனைப்போற்றி
னுறுபிணிமகோதரந்தானெல்லையினீங்குதும்வாயுத்
திறனுறுதீர்த்தந்தோய்ந்தத்திசையுறுசிவனைப்போற்றின். (௨௨)

எத்துணைப்பிணியுநீங்குமின்பமுமெலிதிறஞ்சேர்வர்
பத்தியார்குபோதீர்த்தப்படிந்தநத்திசையெங்கோனைச்
சித்தரின்புறச்சேவித்தோர்செல்வமுற்றின்பமேவி
யொத்தியவினையுநீங்கி *முறைமுறியுடைவரன்றே (௨௩)

ஈசானதீர்த்தமாடியீசானத்திசையைப்போற்றின
மாசானவவிச்சைநீங்கிவரகதிபெற்றுவாழ்வார்
தேசானதீனத்திங்கட்சேர்ந்தவுத்தரநன்னாளி
லேசாதவிருக்குவேததீர்த்தபுனற்றீர்த்தமூழ்கின். (௨௪)

குட்டரோகத்திற்றீர்வர்சோதில்வைகாசித்திங்க
ளொட்டியவிசாகநன்னாளினுரகதீர்த்தத்தின்மூழ்கி
னெட்டெறச்சர்ப்பபீதிநீங்குமற்றதனுண்மாய்நதோர்க்
கிட்டமாய்ச்சிராத்தஞ்செய்யினின்பவீடடைவரன்றே. (௨௫)

உரைத்திடுமித்தீர்த்தங்கட்குள்ளமான்மியங்களெல்லாந்
தரைத்தலையூழிகாலஞ்சாற்றினுமுடிவுறாதாற்
குரைத்தலைத்திரைக்குங்கங்கைசூழவிவெண்மதியொடேந்தும்
வரைந்தனுவல்லானல்லால்வகுத்தெவருரைக்கவல்லார். (௨௬)

---

* 'முறையுளி' என்று பிரதிபேதம்,

திசைமுகனினையவண்ணந்தீர்த்தமான்மியங்களெல்லாம்
வசைதவிர்மகதிநல்யாழ்மாமுனிக்கோதவன்றே
னசைவிலாவுள்ளத்தோடுமயன்கழல்சென்னிசூடி
யிசைவினன்மகிழ்ந்துபெய்மானின்னருளாவியந்தின்புற்றான். ()

செப்புமித்தீர்த்தமேன்மைதெரிந்தவிச்சரிதஞ்சொல்வோர்
தப்பிலாதெழுதுந்தூயோர்தகுதியார்கேட்குநல்லோ
ரிப்பெருப்புவியிற்றீர்த்தம்யாவையுமெய்திமாடு
மப்பெரும்பலன்களெய்தியுற்றிவீட்டடைவரன்றே. (உஅ)

பிரமதேவர் நாரதர்க்குத்தீர்த்தமான்மியமுரைத்த சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிரு[illegible]

---

## இருபத்துநான்காவது
## கழுகுமோசனச் சருக்கம்.

வேறு.

பங்கயத்தவிசினிருக்குநான்முகத்தோன்பண்ணமையாழ்முனிகேட்பக்
கங்கமாய்வடிவநீங்கியகாதைதகருணையாலுரைத்தவாறெமக்குப்
பொங்கழலனையபுனிதமாதவத்தோய்புகலெனமுனிவரர்வினவ
வங்கணன்பாதந்தொழுதருட்சூதனக்கதைகூறுதலுற்றான். (௧)

மாளவதேசமதன்கணுற்றிருப்போன்மறையெலாந்தெரிந்தமாட்சியினு
ளூமேவேசநிதியெனப்புவியோர்நவிலுநாமத்தினையுடையோன்
கேளொமகிழ்ச்சிபூப்பவெண்வகையகேடில்செல்வத்தினனவன்பால்
வேளெனவனப்புப்பொருந்தியசத்யவிரதனென்றொருவன்வந்துதித்தான்.

அன்னகாதலனுமரும்பெறற்றந்தையாயுளினெல்லைகண்டதற்பின்
முன்னவரீட்டுநிதியெலாமுகந்துமுறைபிறழ்விடர்மருவிட்ட
சென்னியர்கூட்டத்தர்க்களித்தவரோடுஞ்சேர்ந்தறநெறியினைநோக்கான்
பின்னலங்கோதைமாதரார்மோகப்பெருக்கினில்வீழ்ந்தழுந்தினனால். (௩)

பிறர்மனைவிழைந்துங்குலமின்மாணிழையார்பெண்மையைநயந்துமாழாந்
மற்வினைதுறந்துங்குலநெறிபிறழ்ந்துமந்தணர்தம்மொடுபகைத்துந் [து
திறனில்*வகையபாதகமிழைத்துந்திரிந்தனன்றிரிடமந்நாளின்
மறைவலாரொருவன்மாலிடத்தன்புவைத்துளானவனொடும்பகைத்தான்.

---

* 'ஐவகையபாதகமிழைத்தும்' என்று பிரதிபேதம்.

பகைத்தனன் றருக்கியிகல்புரிந் திவன்மேற்பற்றியோருழைத் தணிசு
வீச, விகைத்தவறில்லான் றாய்மையிறசையைவீழ்த்தலாற் கழுகுருவாகி,
யுகைத்திடுங்குணபஞ்சவைத்துநீதிரியென் றுருத்தவன்சபித்தலுமன்னோ
ன், றகைத்திடநேற்றுன் றேட்டியங்கூர்வாய்த்தடஞ்சிறைக்கழுகுருவ
டைந்தான். (௫)

கழுகுருவடைந்து திசைதொறம்படர்ந்துகளேபாநுகர்ந்துசெல்காலைப் [கி
பழுதினல்வினையின்பான்மையான்விண்ணம்பறந்துதென்றிசைமுகநோக்
மழுவலானல்லூரெல்லைவந்தடுத்துமறைவலான்றீர்த்தவாவியிறே
ரிழுதுடையீனிலூன்கவர்ந்துணபானீர்ம்புனற்குத்தியதன்றே. (௬)

குத்தலும்பிரமதீர்த்தநீர்த்திவலைகொடியவெஞ்சிறைநீக்கழுகதனைப்
பொத்துதல்செய்யக்கணத்தினவ்வுருவம்போயதுதேவனுய்ப்பின்ன
ரத்திசையவருநகாணநீள்சோதியிலங்கொளிவிமானத்தினேறி
முந்தகமுரிஞ்சுமாமடமகளிர்முகிண்முலைத்தடத்தின்மூழ்கினனால். (௭)

புல்லியகழுகுத்தேவனுய்வானோர்போற்றவீற்றிருந்ததுவென்று
னல்லிசைவல்லாயுளங்கசிந்தச்சந்நீர்நாடியேயாடுதல்புரிந்தோ
ரெல்லையில்வினையின்சிமிழ்ப்பெலாமொருவியீறிலாவின்பவீட்டதனை
யொல்லையினடைநலதிசயமோவென்றோதிமவூர்தியாங்குரைத்தான். (௮)

உரைத்தலுமகிழ்ச்சிபூத்தநாரதனுமொண்டாமலுமையொருபாக
னருத்திகூர்கருணைக்களவையற்றளதோவைபனல்லூரினைப்போலத்
தனித்தலமதன்கட்டலம்பிறிதுண்டோசக்கசாகரத்தடம்போலத் [றனள்.
திரைப்புனற்றடம்வேறுளதுகொலென்றுதிசைமுகற்பணிந்துசென்றனன் (௯)

மொழிந்தவிக்காதையெழுதுநர்கேட்போர்முறைவிரித்தியம்புமேதகவோ
ரழுந்துபாதகங்களனைத்தையுமொருவியகலிடத்தரசுவீற்றிருந்து
தொழுந்தகையமரர்தொழுதனர்போற்றத்துறக்கநாடெய்திவெண்டிங்கட்
கொழுந்தணியவிப்பரயபரன்பதுமக்குரைகழனீழல்வாழ்ந்திருப்பார். (௧௦)

கழுகுமோசனச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௯௫௯.

---

## இருபத்தைந்தாவது
## வீதிவிடங்கச்சருக்கம்.

---

வேறு.

வானினின்றுவருமருமைத்திரு
மேனியாரருள்வீதிவிடங்கனார்
தானிலத்துநல்லூர்வைகுமான்மியந்
ஞானிகட்கெனச்சூதனுஞ்சாற்றுவான். (௧)

அருந்தவத்தினிராதியுகத்தினிற்
றிருந்துகோலெண்டிசையுஞ்செலுத்தியே
பொருந்தலாரைப்புறங்கண்டரசுசெய்
திருந்துளான்முசுகுந்தனிணையிலான். (உ.)

அன்னவேந்தனவனிபுரக்குநா
ளின்னல்செய்யுமசுரரிடுக்கணாற்
பொன்னினாட்டிற்புரந்தரனாதியோர்
துன்னியன்னவற்கின்னணஞ்சொல்லுவார். (ங)

சீற்றமுற்றெழுதீயவவுணரா
லாற்றல்போய்மிகவல்லலுற்றேமெமைப்
போற்றல்செய்துபுரத்தற்குநீயவர்
கூற்றமாகக்குமைத்திடல்வேண்டுமால். (ச)

என்னவிண்ணோரிரத்தலும்வாட்படை
மன்னர்மன்னவன்மற்றிதுவேலது
சொன்னவாறுதொலைத்தசுரேசரைச்
சின்னபின்னஞ்செய்வேனென்றுசென்றனன். (ரு)

சென்றுவேந்தனந்தேவர்சூழத்தொடு
நின்றுதானவர்நீள்குலம்யாவையுங்
கொன்றுவிண்ணங்குடியேற்றிவாசவன்
வென்றிகூடவிறல்புரிந்தானரோ. (சா)

மற்புயத்திகல்வாட்படைமன்னனைக்
கற்பகத்திருநாட்டுறைகாவலன்
பொற்புறத்தழுவிப்புகழ்ந்தேத்திநீ
யெற்பதத்தரசின்றுதந்தாயென்றான். (எ)

இன்றுநீசெயுதவிக்கியான்பிறி
தொன்றுகைம்மாறுதவுதலென்கொலாம்
வென்றிவேலவவாயினும்வேண்டுவ
நன்றுகேளதுநல்குவனீங்கென்றான் (அ)

உம்பர்நாயகனிவ்வணமோதலு
மெம்பிரானருளாலிகல்வேந்தனு
மம்பவேலவனோடு*மமர்ந்தவின்
னம்புனார்தமைநல்கென்றியம்பினன். (கூ)

---

* 'அமர்ந்தவிநம்பனூர்தமை' என்று பிரதிபேதம்.

மன்னன்சொற்றலும்வாசவன் மாலவன்
முன்னநல்கியமூர்த்தியிவரெனப்
பின்னையொன்றுரையான்பெரிதேங்குபு
தன்னையும்மறந்தான்றடுமாறினான். (க௦)

கொள்ளுகென்னுமக்கூற்றிடனுருயிர்
விள்ளுமாவெனவிம்மிதமுற்றவன்
றள்ளுமாலுரையென்னுமத்தன்மையால்
வள்ளன்மன்னவன்கொள்ளவழங்கினான். (கக)

வழங்கலோடுமகிதலமன்னவ
னழுந்துமன்பினொடாகம்புளகித்தே
விழுந்துபோற்றிவிமலனைக்கைக்கொண்டு
தொழுந்தகைமகவானைத்துதித்தரோ. (கஉ)

புற்றிடங்கொண்டபூரணனாண
னற்றந்தீர்த்தன்றரும்பெறன்மாமண
முற்றுருமுலைமுண்டகப்பூமகட்
குற்றவாறுசெயூரில்வந்தெய்துவான். (கங)

விண்ணநீங்கிவிரைமலர்ச்சோலைவாய்ந்
தண்ணந்தாதுதவழ்பொன்னிநாடெய்திக்
கண்ணகன்றகடிமதில்சூழ்வரு
மண்ணனல்லூரடைந்தனனென்பவே. (கச)

பூவலர்ந்தபுதுமணச்சோலைவான்
காவெனுந்தகைகாட்டவிண்ணுட்டகந்
தேவலிந்திரனெய்தமராபதித்
தேவநன்னகர்போன்றதச்சீர்நகர். (கரு)

அன்னவண்ணமணிவளமல்குபு
துன்னுமந்தநல்லூரெல்லைதோன்றலு
முன்னவன்றினமூன்றிவண்வைகவே
மன்னசெய்கென்றோர்வாணியெழுந்ததால். (கசு)

வாணிவானத்திவ்வண்ணமெழுதலு
மாணிச்செம்பொனவிர்மணிமோலியான்
றாணுவின்னருடானிதுவேலது
பேணிச்செய்குவன்பெற்றியின்யானென்றான். (கஎ)

இந்திரன்செய்சிறப்பினெழுமடங்
கந்தமின்றியவன்புடன்மன்னவன்
சுந்தராசலத்தொன்னகரந்தனி
லெந்தைவீதிவிடங்கர்க்கியற்றினன் (கஅ)

திறல்கொண்மன்னவன்செய்தசிறப்புவாந்
திறைவன்பீடத்திருந்தசைந்தாடின
னறைகொள்பூமலர்நாற்றிக்கும்போர்ப்பவா
னுறையுந்தேவருமுற்றுநின்றாடினார். (கக)

அந்தணாளருமறையோசையுந்
தொந்தமாமன்பர்தோத்திரவோசையு
முந்துபல்லியமுண்டெழுமோசையுஞ்
சிந்துவேழுமன்சேர்ந்தெனவார்த்தவே. (உ0)

ஊறிலாவளமுற்றநல்லூரிலோர்
கூறுநம்பன்குவலயம்போற்றவே
வீறுசித்திரவீதிவிடங்கனென்
றோர்பேர்பெற்றிருந்தனனென்பவே. (உக)

வானநாட்டின்மணிமுடியிந்திரன்
றானமாமமராபதிதன்னினு
ஞானமூர்த்திநல்லூர்கண்டுறைவனே
லீனவான்பதியாதிதற்கொப்பதே. (உஉ)

மூன்றுநாளவண்முற்றலுங்கோமக
னூன்றுகாதலினேங்குநல்லூர்வயிற்
றோன்றுசோதிச்சுயம்புலிங்கம்பணிந்
தேன்றுவான்பணியாதும்மியற்றியே. (உங)

கரும்புஞ்செந்நெலுங்காய்க்கமுகும்பிடைக்
தரும்புந்தண்ணடையாதியுமாதிக்கு
விரும்புபூசைக்குவேண்டியவாதையுஞ்
சுரும்புலாந்தொடையானல்கிச்சூழ்வந்தே. (உச)

எந்தைவீதிவிடங்கரைப்பண்டிசை
வந்துவந்துவழியிடைவந்திப்பக்
கொண்டுலாமலரோடுகொழும்பொனுஞ்
சிந்தியாரூர்ந்திருநகருப்புந்தனன். (உரு)

செம்பொற்கோயிலுட்டேவசிங்காதனத்
தும்பர்கோனையுவப்புடன்ருபித்து
நம்பனுக்குநயந்தனையாவையு
மிம்பர்காமெய்யவேநதல்செய்தானரோ. (௨௬)

அந்தணருநதற்கெய்துங்காலையி
னெந்தைநல்லூரிடத்தமர்ந்தானென்றுற்
சுந்தராசலத்தொல்பதியாவைக்கு
மூந்துமாறுமொழியவும்வேண்டுமோ. (௨௭)

சாற்றுமிக்கதைதன்னைப்படித்துளோ
ரேற்றமாகவினிதுடன்கேட்டுளோர்
நாற்றிசைப்புவியாண்டுநயப்புடன்
வீற்றிருப்பர்பொன்மேதினிமீதரோ. (௨௮)

வீதிவிடங்கச்சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—கஅ௭.

---

இருபத்தாறுவது

## அமர்நீதிநாயனார்சருக்கம்.

---

வேறு.

பாந்தளாபரணம்பூண்டபரம்பரன்கருணைதன்றுற்
சார்ந்தமார்புலிக்கான்மேலோன்றனயன்முன்சாற்றுமின்ற
வேந்தலாரமர்நீதிப்பேரிசைந்துளார்சரிதமிப்பா
லாய்ந்துரையென்னச்சூதனருந்தவர்க்குரைக்கலுற்ருன். (௧

பொங்குநீர்ப்பொன்னிநாட்டிற்போதவிழ்த்தளிபண்பாடும்
பங்கயப்பழனவேலிப்பழையாறைப்பதியில்வாழ்வார்
மங்கலமிகுந்தசெல்வவணிகர்தங்குலத்தில்வந்தா
ரங்கணர்க்கன்புமிக்காரமர்நீதியென்னும்பேரார். (௨

எந்தையாரடியார்க்கென்றுமீறில்பேரன்புதன்றுற்
பந்திபந்திகளாய்வைத்துப்பாங்குடனன்னமிட்டுக்
கந்தைகோவணங்களீவார்காலினுங்கலத்தினுலும்
வந்திடுநிதிகளுய்த்துவான்கதிப்பயனைக்கொள்வார். (

அண்ணலாரடியாருண்ணவறுசுவையடிசிலீவா
னண்ணுமாதவர்நல்லூரினகரினோர்மடமுண்டாக்கி
யெண்ணிலாச்சுற்றத்தோடுமெந்தைநல்விழவுகாணத்
தண்ணந்தார்வணிகர்கோமான்சார்ந்தவனுறையுங்காலை. * (௪)

அங்கண்மாஞாலமெல்லாமவர்புகழ்விளங்கச்செய்வான்
சங்கரன்பிரமசாரிதன்னுடைக்கோலங்கொண்டு
சிங்கவேறனையார்முன்னஞ்சேர்தலும்வணங்கியெந்தா
யிங்குவேதியராலட்டவின்னமுதருந்திப்பின்னர். (௫)

அடியனேனுய்யவாட்கொண்டங்கணர்திருநாண்முற்று
மொடிவிலாநேயத்தோடுமுறைந்துபின்னகல்வீரென்ன
நெடியமாலறியாவெங்கோனேர்ந்தனனுவகைபூத்துப்
படிமிசையெவர்நின்போலப்பத்திமைபுரிவரென்றே. (௬)

கரதலத்திருக்குந்தண்டிற்கட்டுகோவணமிரண்டி
லொருதனிக்கோவணத்தையொப்பிலான்கையில்வாங்கி
யிருநிலத்திதனுக்கொப்பதில்லையாலரிதிற்காத்துத்
தருதியெனவைத்துமூழ்குந்தன்மையன்போலச்சென்றான். (௭)

சென்றவன்புனலிலாடித்திரும்பிவந்தவனைப்போல
நின்றுகோவணத்தைக்கேட்பநிகரிலாவன்பரோடி
யன்றுகோவணங்கொடுய்த்தவறைபுக்குக்காணாராகி
யின்றிதற்கென்செய்கோவென்றில்லொடுமிரங்கிச்சோர்ந்தார். (௮)

கோவணமொளித்தகள்வர்குரைகழற்சரணம்போற்றிக்
காவல்கொண்டுய்த்தியென்னக்கருணையாலென்கைதந்த
தாவில்கோவணத்தைக்காணேன்றமியனேன்றவறெண்ணாது
பூவணப்பட்டுநூலாற்புனைந்தகோவணங்கொள்கென்றார். (௯)

என்றலுஞ்சினந்துபெம்மானெரியெழவிழித்துநோக்கி
நின்றவர்தம்மைச்சீறிநிகரில்கோவணங்கள்கொள்வா
னொன்றியவன்பன்போலவுலகினைமருட்டுகின்றாய் [ன்.
சென்றதுகொணர்தியுன்பொய்ச்சிமிழ்ப்பினிற்படேனியானென்றா

அளவிலாமாயைவல்லவண்ணலிவ்வாறுகூற
வுளநடுக்குற்றுக்கண்ணீரொழுகநெட்டுயிர்த்துப்பின்னுந்
தளவவாணகையாளோடுஞ்சாக்கறைபுகுந்துதேடி
விளையுநீரென்னோவென்றுமீண்டடிவீழ்ந்துசொல்வார். (௧௧)

* 'சார்ந்தனருறையுங்காலை' என்று பிரதிபேதம்.

தந்தகோவணத்தைக்காணேன் றூயனேன்பொய்த்ததில்லை
யெந்தைநீபொறுத்திவெவ்வேறெண்ணில்கோவணங்களீவே
னிந்தனைசெய்யேயென்னத்தீயெழுநகைத்துநீகொண்
டுந்துகோவணத்துக்கொப்பதோன்றெமக்கமையுமென்றான். (கஉ)

ஒப்பதிங்குளதேலையுறுதுலையிடுகநேராய்
வைப்பன்வேறுள்ளதெல்லாமற்றிதினுடன்பாடென்னக்
கைப்பதுமத்திற்கொண்டகவின்கொள்கோவணத்தையன்றோன்
செப்பியவாறேயுய்த்தான்றெருமரவொழிந்துசெல்வா. (கரு)

திவ்வியவடிவங்கொண்டோன்சேர்த்தகோவணத்துக்கொப்ப
வெவ்வவொருகோவணங்கொண்டுய்த்தலுநிறைநில்லாம
லெவ்வமுற்றுயரநாய்கரிதிறம்பூதென்றெண்ணி
யவ்வியந்தீர்ப்பார்வல்லேயறையிடைப்புகுந்துவாரி. (க௪)

தூயகோவணத்தின்சும்மைதாசுடைப்பொதிகளிந்த
மாயிருஞாலம்விற்குமணிவிளிம்பெறிந்தவாடை
மேயபூம்பட்டுமிட்டுமேவரக்காணூர்பின்னும்
பாயொளிப்பணியும்பொன்னும்பலபண்டத்தொ... மிட்டார். ()

இடுதலுஞ்சமனில்லாமலெக்கையார்தட்டுத்தாழ
வுடையதோர்பொருண்மற்றின்றியுற்றதம்மனைவியோடு
மடநடைமகாருந்தாமுமகிழ்ந்தனரேறுங்காலை
விடையவர்தட்டினோடுமேவாநின்றதன்றே. (கரு)

நிற்றலுமேறுநதட்டேநீடொளிவிமானமாக
வெற்றிமால்விடைமேலேறிவிளங்கிழையொருபால்வைகக்
கற்றையஞ்சடையான்ஞேர்கண்களிகூரத்தோன்றி
முற்றுபேரின்பவீடுமுறைமையாலடையச்செய்தார். (கஎ)

ஆதலானல்லூர்மேயவண்ணலாரருளின்றன்மை
யோதுமாறெளிதோயார்க்குமூழிதோறுரைசெய்தாலு
மாதவர்கேண்மினிந்தவண்ணநற்பதியின்மேவிப்
பூதலம்புகழவின்பம்பொருந்தினரனேகர்மாதோ. (கஅ)

கற்றவர்கேட்போரிந்தக்காதையைக்காதல்கூர
முற்றவும்வரைதல்செய்வோர்மூதுலகாண்டுபின்னர்ப்
பெற்றமீதுயர்த்தபெம்மான்பேரருளதனுலென்று
முற்றபேரின்பவீட்டினுகந்துவீற்றிருப்பரன்றே. (ககூ)

இப்பரிசுகந்துசூதனைமபிரானருளினாலே
தப்பிலாவிரதம்பூண்டசவுனகன்முதலியோர்க்குச்
செப்பினனவருநல்லூர்த்திருமலைச்சொக்கிபாக
னொப்பருங்கருணைவாழ்த்தியுளங்களித்துவகைபூத்தார். (உ0)

சூதமாதவனைநோக்கித்தொழுத்தகுமுனிவரெல்லா
மூதுணர்வியாதன்சொற்றமுறைமையானல்லூர்மேன்மை
யாதரிம்பெருகத்தேனுமமிர்தமும்போலச்சொற்றாய்
நீதியாலுணர்ந்தேமெல்லாநின்னையார்நிகர்ப்பரென்றார் (உக)

வள்ளலாருகந்தநல்லூர்மான்மியமிருந்தவாறுந்
தெள்ளருநீர்த்தீர்த்தம்யாவுஞ்செழித்தவண்சிறந்தவாறு
முள்ளினோர்க்கெங்கோனின்பமுதவியவாறுநோக்கித்
தள்ளருந்தவத்தோரெல்லாந்தமதுடல்பூரித்தாரால். (உஉ)

நறுமலர்ச்சோலைசூழுநல்லூரிலாண்டார்செய்யுந்
திறல்செழுகருணைவாழ்த்தித்திருமலைச்சொக்கியென்னும்
பிறைநுதலிமபவல்லிபேரருள்வாழ்த்திநாளு
முறுதனருவகைபூத்தாரோங்கியதுலகமெல்லாம். (உங)

திருமலைச்சொக்கிவாழிதேகளிவிநாயகன்றன்
மருமலர்த்தாள்கள்வாழிமணவாளக்கோலம்வாழி
வெருவுதரவிர்க்குங்காசிவிநாயகன்முதலோர்வாழி
முருகவேள்வாழிதிவ்யமூர்த்திகளெவரும்வாழி. (உச)

அந்தணர்வாழிநல்லூரணிவளம்வாழியோங்குஞ்
சுந்தரசைலம்வாழிசுயம்புநல்லிலிங்கம்வாழி
சந்ததந்தலத்தோர்வாழிதானிகர்முதலோர்வாழி
செந்தமிழ்ப்புராணம்வாழிசெப்பினோர்வாழிவாழி. (உரு)

திருப்பணிசெய்வோர்வாழிதிருமலைச்சொக்கிபாகர்
மருப்பொலிபாதத்தன்புவைத்துளோர்வாழியென்றும்
விருப்பமீதாரப்பூசைவிழாவொடுபுரிவோர்வாழி
தரைத்தலம்புரக்கும்வேந்தர்சந்ததம்வாழிவாழி. (உசு)

அமர்நீதிநாயனர்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—க0கங.



# நல்லூர்ப் புராணம்

## முற்றுப்பெற்றது.

